POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# புரட்சித்தலைவர் நடவடிக்கை

Regd. No. TN - MS [C] 244 Phone: 440212 4 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10 சென்னை 21-4-1986 திங்கள் :- வெளியூர் 22-4-1986 செவ்வாய் [இதழ் 180

## சாலை விபத்துக்களைத் தடுக்க மாநில அளவில் குழு அமைப்பு

**சென்னை, ஏப். 21- சாலை விபத்துக்களைத் தடுக்க முதல்வர் புரட்சித்தலைவர் பல்வேறு நடவடிக்கைகளை எடுத்துள்ளார். மாநில அளவில் குழு ஒன்றையும் அமைத்துள்ளார்.**

சாலை விபத்துக்களை தவிர்க்கவும், குறைக்கவும முதல்வா புரட்சித்தலைவர் தலைமையில் ஒரு ஆலோசனைக் கூட்டம் இன்று கோட்டையில் நடை பெற்றது.

விபத்துக்களை குறைப்பதற்கும, தடுப்பதற்கும் பல்வேறு உததரவுகளை உடனடியாகப் புரட்சித் தலைவா பிறப்பித்தார்.

மாநில அளவில் குழு ஒன்றையும் அமைத்துள் ளார்.

சாலை விபத்துக்களை தவிாக்கவும், பொது மக்களும், வாகனங்களும சாலை விதிமுறைகளை ஒழுங்காக கடைப்பிடிகக வழிவகைகளை காண்பதற்காகவும சாலை விபத்துக்களால் ஏற்படும் உயிர் சேதங்களை குறைப்பதற்கும் முதல்வர் புரட்சித தலைவர் தலைமையில் ஆலோசனைக் கூட்டம் கோட்டை 10வது மாடியில் நடைபெற்றது காலை 10.30 மணிக்கு துவங்கிய இக்கூட்டம் 12.30 மணிக்கு முடிவடைந்தது.

இந்தக் கூட்டத்திற்கு முதல்வர் புரட்சித் தலைவர் தலைமை வகித்தார். அமைச்சா முத்துசாமி, தலைமைச் செயலாளா அந்தோணி, உள்துறைசெயலாளா டி.வி. வெங்கட்ராமன்நிதித்துறை செயலாளர் சி. ராமசந்திரன் போலீஸ் டைரக்டர் ஜெனரல் ரவீந்திரன், ஐ. ஜி. ஸ்ரீபால் கமிஷனர் தேவாரம் மருத்துவததுறை இயக்குனர் லலிதாகாமேசுவரன் மற்றும் 14 போக்குவரத்துக் கழக நிர்வாக இயக்குனர் களும இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டாாகள்.

கூட்டம முடிந்தபிறகு கூடடத்தில் எடுககப்பட்ட முடிவுகளை உள்துறைச் செயலாளர் வெங்கட்ராமனும். அமைச்சர் முத்துசாமியுமநிருபாகளிடம் விளக்கினா.

டி வி. வெங்கட்ராமன் கூறியதாவது:—

கூட்டத் துவக்கத்தில் அமைச்சர் முத்துசாமி அனைவரையும் வரவேற்றார். போக்குவரத்து பிரச்சினை நாளுக்குநாள் அதிகரிதது வருகிறது அதை சமாளிக்க குறுகியகால திட்டம்-நீண்டகாலத்திட்டம் என்று திட்டங்களை வகுத்து அதை அமல்செய்ய வேண்டிய சூழநிலை உருவாகி இருப்பதாகக் கூறினார்.

கூட்டத்தில் பங்கேற்ற எல்லா அதிகாரிகளும் பல்வேறு கருத்துக்களை தெரிவித்தார்கள். அவ்வப்போது முதல்வர் சில திட்டங்களை ஏற்று உடனடியாக அலவகளை நிறைவேற்ற ஆணைகளைப் பிறப்பித்தார். அந்த ஆணைகள் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு அனுப்பப்பட்டு அவை நிறைவேற்றப்படும். போக்குவரத்து பிரச்சினைகளை சமாளிக்க மாநில அளவில் குழு ஒன்று அமைக்கப்படுமென்று முதல்வர் அறிவித்தார்.

இந்தக்குழு மூன்று மாதத்துககு ஒரு முறை கூடி இந்த முடிவுகளில் எவ்வளவு அமல்படுத்தப் பட்டுள்ளது மேலும் எடுகக வேண்டிய நடவடிக்கைகள் என்ன என்பது பற்றியெல்லாம் விவாதிதது அரசுக்கு அறிக்கை தரும். மாநில குழு அமைப்பதற்கான உததாவை முதல்வர் புரட்சித்தலைவர் பிறப்பித துள்ளார்.

இவ்வாறு டி. வெங்கட்ராமன் கூறினார்.

### கூடுதல் போலீஸ்

கூட்டததில எடுக்கப் பட்ட முடிவுகள் குறித்து அமைச்சர் முத்துசாமி கூறியதாவது:—

போக்குவரத்து பிரச்சினைகளை சமாளிக்க போக்குவரத்து துறையில் அதிக அளவு போலீஸ் காரர்களை நியமிக்க புரட்சித்தலைவர் உத்தர விட்டிருககிறார். போக்குவரத்து துறையினருக்கு கூடுதலாக வாகன வசதி செய்து தரவும் முதல்வர் உத்தரவிட்டிருக்கிறார். சென்னை நகருககு உடனடியாக10ஜீப்புகளும் 30 மோட்டார் சைககிள் களும் உடனடியாக வழங்கப்படும்.

மற்ற மாவட்டங்களுக்கு எவ்வளவு தேவைப் படுகிறது என்பதை கேட்டறிநது வாங்கிக் கொடுக்கப்படும்.

போக்குவரத்து விதிகளை கண்காணிக்க போக்குவரத்து துறையினருக்கு உதவிகரமாக 100 'வாக்கிடாக்கி' செட்டுகள் வாங்க முதல்வர் உத்தரவிட்டிருக்கிறார்,

### நவீன கருவிகள்

மது அருந்தி விட்டு வாகனங்களை ஓட்டிச் செல்லும்டிரைவர்களை மது அருந்தியிருக்கிறார்களா என்று கண்டு பிடிக்க வாயை ஊதச் சொல்லி கண்டு பிடிக்க வேண்டியுள்ளது. இதற்குப் பதிலாக புதிய கருவியை வாங்க முதல்வர் உத்திர விட்டிருக்கிறார்.

ஆல்கஹால்ப்ரீத் அனலைஸ் என்ற கருவிகள் வாங்கிக் கொடுக்கப்படும் சாலைகளில் இந்தக் கருவியை வைத்து சோதனை செய்வார்கள்

டிரைவர்கள் தவறு செய்தால் அவர்களது லைசென்ஸ் ரத்து செய்யப் படுகிறது

ஆனால் அவர்கள் வேறு இடங்களுக்குச் சென்று லைசென்ஸ் பெற்று விடுகிறார்கள். ஆகவே இதற்கு கம்ப்யூட்டர்களை பயன் படுத்த முதலவர் உத்தர விட்டிருக்கிறார். எந்த இடத்தில் எந்த டிரைவர் தவறு செய்திருந்தாலும் அதனை இதன் மூலம் கண்டுபிடிக்க முடியும். சாலைகளில் எந்த இடத்தில் விபத்துக்கள் அதிகமாக நடக்கிறது? குறிப்பிட்டசில இடங்களில் அடிக்கடி விபத்துகள் நடப்பது ஏன் என்பதை ஆய்வு செய்து குறுகிய காலத்தில் இதற்கான நடவடிக்கைகளை எடுக்கச் சொல்லி இருக்கிறார்.



டிரைவர் பயிற்சி முழுவதையும் போக்குவரத்துக் கழகங்கள் மூலமாகவே செய்வதற்கு முதலவர் உத்தரவிட்டிருக்கிறார் போக்குவரத்துக் கழகங்களுக்கு தேவையான டிரைவர்களுக்கு எல்லா போக்குவரத்துக் கழகங்களுமே பயிற்சி பள்ளியை நடதது கின்றன. மற்ற துறையினருக்கும் தேவையான டிரைவர்களுக்கு படிப்படியாக இங்கு பயிற்சி தரப் படும்.

தமிழ்நாட்டில் விபத்துக்கள அதிகமாக இருக்கிறது என்றாலும் மற்ற மாநிலங்களைகணக்கிடுமபோது இங்கு குறைவாகவே இருக கிறது. 1970ம் ஆண்டில் நூறு என்று இருந்தால் 80ம் ஆண்டில் குஜராத்தில் 252 ஆகவும், ராஜஸ்தானில் 206 ஆகவும் மத்தியபிரதேசத்தில் 224 ஆகவும், ஆந்திராவில் 201 ஆகவும் இருக்கிறது. ஆனால் தமிழகத்தில் 142 தான். வண்டிகளின் எண்ணிக்கை 1980ல் 2லட்சத்து 74ஆயிரமாக இங்கு இருந்தது 85 டிசம்பரில் 5லட்சதது 64 ஆயிரமாக உயர்ந்திருக்கிறது, ஆனாலும் விபத்தின் விகிதாச்சாரம்குறைவுதான். சாலை விதிகளை மீறும் நடைபாதை வாசிகளுக்கு கடுமையான தண்டனை விதிக்கவும் முடிவெடுக்கப் பட்டுள்ளது விதிகளை மீறுவோரின் மீது கடும் நடவடிகை எடுக்கப்படும்.

முதல்வர் தெரிவித்துள்ள உத்தரவுகள் ஒரு வாரததில் அமல் படுத்தப்படும்

### முதல்வர் வேண்டுகோள்

பலகோடி ரூபாயகளை செலவு செய்து இந்த நடவடிக்கைகளை எடுப்பது மக்களின் உயிர்களை காப்பதற்காகத்தான் விதிகளை மீறும் பொதுமக்கள் மீது கடுமையான நடவடிக்கை என்பதும் மக்களுடைய உயிரைக் காப்பதற்குதான்.

இந்த திட்டங்களுக்குமுழு ஒத்துழைப்பு தரும்படி முதல்வர் புரட்சித்தலைவர் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி கூறினார்.

## புரட்சித்தலைவர் முன்பு கழகத்தில் இணைந்த பேரூராட்சி தலைவர்

சென்னை. ஏப். 21— சேலம் மாவட்டம் அத்தனூர் பேரூராட்சித் தலைவர் தங்கவேலு மற்றும் பேரூராட்சி உறுப்பினர்கள் 7 பேர் முதல்வா புரட்சித்தலைவா முன்னிலையில் கழகத்தில்இணைந்தனர்.

அப்போது கே. பி. ராமலிங்கம் எம். எல். ஏ, ஊராட்சி ஒன்றியத் தலைவர் ஈஸ்வரன் ஆகியோா உடனிருந்தனர்,



புதுக்கோட்டை மாவட்ட முன்னாள் தி. மு. க செயலாளர் அப்துல்மஜீத்தும், நகர தி மு.க. செயலாளர் ஆதிமூலமும் மற்றும் நகர் மன்ற தி மு.க. உறுப்பினர்களும் புரட்சித்தலைவர் முன் கழகத்தில் இணைந்தனர்.

## மதுரையில் கடும்வெயில்

மதுரை. ஏப். 21— மதுரையில் வெயில் கொளுத்துகிறது. இன்றைய வெயில் 105 டிகிரியை எட்டியது. அனல் காற்றும் வீசியது.

## வைஜயந்திமாலா கணவர் உடல்நிலை கவலைக்கிடம்

சென்னை ஏப். 21— வைஜயநதிமாலா எம். பியின கணவர் டாக்டர் பாலியின் உடல் நிலை கவலைக்கிடம் என்று டாக்டர்கள் தெரிவித் துள்ளனர்.

தென்சென்னை தொகுதி நாடாளுமன்ற உறுப்பினா வைஜயந்திமாலாவின் கணவர் டாக்டர் பாலி உடல் நலக்குறைவு காரணமாக சென்னை அப்பல்லோ மருத்துவமனையில் சிகிக்சை பெற்று வருகிறார்.

கடந்த வெள்ளிக்கிழமை அவருக்கு ஆபரேஷன் நடந்தது நரம்பியல்நிபுணர் டாக்டர் நரேந்திரன் இந்த ஆபரேஷனை நடத்தினார்.

### டாக்டர்கள் தகவல்

அதன் பிறகு அவருக்கு மூளையில் ரத்த ஓட்டம சீரானது. டாகடர்பாலிக்கு தலையில் அடிபட்டு மூளையில் ரத்தஓட்டம் உறைந்து விட்டதால் ஆபரேஷன் செய்யப்பட்ட தாக டாக்டர் நரேந்திரன் கூறினாா.

நேற்று மீண்டும் அவருக்கு ஆபரேஷன் நடந்தது. ஏற்கனவே ஆபரேஷன் செய்த இடத்தில் ரத்தம் மீண்டும் உறைந்து விட்டதால் இந்த ஆபரேஷன் நடந்ததாக டாகடர் நரேந்திரன் தெரிவித்தார்.

இப்போது உடல்நிலை தேறியிருப்பதாகவும்சொல்லப்பட்டது.

ஆனால இன்று காலை டாகடர் பாலியின் உடல் நிலை மோசம் அடைநதது. அவருக்குசிறுநீரகக்கோளாறும் ஏற்பட்டுள்ளதாக டாக்டர் நரேந்திரன தெரிவித்தார். மருத்துவர்கள் தொடர்ந்து சிகிச்சை அளித்து வருகிறாாகள்.

(முன்னந்த செய்தி) 4-ம் பக்கம்

### முதல்வர் புரட்சிததலைவர் பார்த்தார்

முதல்வா புரட்சித் தலைவர் இன்று மீண்டும் 2வது தடவையாக அப்பல்லோ மருத்துவ மனை சென்று டாக்டர் பாலியின் உடல் நலம் பற்றி விசாரித்தாா

## புற்றுநோயை தடுக்க உதவும் வெங்காயம்-வெள்ளைப் பூண்டு

ஹானலுலு. ஏப், 21— வெள்ளைப்பூண்டு-வெங்காயம் ஆகியவை புற்றுநோய் வராமல் தடுக்க உதவுவதாக விஞ்ஞானிகள் கண்டு பிடிததுள்ளனர்.

அமெரிக்காவில் ஹானலுலு பகுதியில் ஆண்டாசன் மருத்துவமனை உள்ளது இந்த மருத்துவமனையிலுள்ள மைக்கேல் வார்கோலிச் தனது ஆராய்ச்சியின் பயனாக மனித இனத்தை அழிக்கும கொடிய நோயான புற்றுநோயைத் தடுக்க குறைந்த செலவிலானமருத்துவத்தை கண்டு பிடித்துள்ளார்.

புற்று நோயைத்தடுக்க வெள்ளை பூண்டும், வெங்காயமும் பெருமளவில் உதவுவதாக அவா கண்டறிந்துள்ளார். நம் ஊரில் மலிவாக கிடைக்கும் இந்த பொருட்களின் மகததுவத்தை அமெரிக்க மருத்துவர் கண்டறிந்துள்ளார்.

புற்று நோய் வராமல் தடுக்க வெங்காயத்தையும், வெள்ளைப் பூண்டையும் உணவில அதிகம் சேர்க்க ஒரு இயக்கமே அமெரிக்காவில் நடதகப்படவுள்ளதாகவும் தெரிகிறது

## முடி திருத்துவோர், சலவையாளர்கட்கு அரசு நிதி உதவி

சென்னை, ஏப். 21— முடிதிருத்துவோர். சலவையாளர்கள் கடை வைக்க நிதி உதவி வழங்கும் திட்டம் அரசின் பரிசீலனையில் உள்ளதாக அமைச்சர் கோவேந்தன் கூறினார்.

சட்ட சபையில் பிற்பட்டோர் நலத்துறை மானியக் கோரிக்கையை அமைச்சர் கோவேந்தன் தாக்கல் செய்தார்.

அதில்கூறியிருப்பதாவது- சலவைத் தொழிலாளர்கள், முடி திருத்துவோர் கடை வைக்க ஐயாயிரம் ரூபாய் கடனுதவி வழங்கும் திட்டம் அரசின் பரிசீலனையில் உள்ளது. இதில் 1500 ரூபாய் அரசு மானியமாகவும். மீதி 3500 ரூபாய் வங்கிக் கடனாகவும் வழங்க திட்டமிடப்பட்டுள்ளது

பிற்படுத்தப்பட்ட சமுதாயத்தைச்சேர்ந்த குறிப்பிட்ட அளவு சிறந்த மாணவர்களைத் தேர்வு செய்து நவீன கம்ப்யூட்டர் பயிற்சி பெற டெலலிக்கு அனுப்பும் திட்டமும அரசின் பரிசிலனையில் உள்ளது.

தறபோது பிளஸ் 2 தேர்வில் மாநில அளவில் ஒரு மாணவருக்கும்- ஒரு மாணவிக்கும் தலா ஆயிரம் ரூபாய் பரிசு வழங்கப் படுகிறது இதை மாவட்ட அளவில தலா500 ரூபாய் வீதம் வழங்கஅரசு பரிசீலித்து வருகிறது.

பிற்படுத்தப்பட்ட மாணவர்கள் விடுதிகளில் தங்கிப் படிக்கும் மாணவ-மாணவியரின் உணவுக்காக வழங்கப்படும் தொகையை உயர்த்துவது குறித்தும் அரசு பரிசீலித்து வருகிறது.

தேசிய ஊரக வேலை வாய்ப்புத்திட்டத்தின் கீழ் படிப்படியாக எல்லாவிடுதிகளுக்கும் சொந்தக் கட்டிடங்கள் கட்டுவது குறித்த செயற் குறிப்பும் அரசின் தீவிர பரிசீலனையில் உள்ளது.

அண்ணா பல்கலைக் கழகததில் சென்னை தொழில் நுட்பக் கல்லூரி மூலம் பிற்பட்ட மாணவர் கட்கு கம்ப்யூட்டர் பயிற்சி அளிக்கும திட்டமும் அரசின் பரிசிலனையில் உள்ளது

இவ்வாறு அமைச்சர் கோவேந்தன் கூறியுள்ளார.

## கொடைக்கானல் ஏரியில் உல்லாச படகு கவிழ்ந்து தேனிலவு தம்பதிகள் சாவு

கொடைக்கானல், ஏப், 21— கொடைக்கானல் ஏரியில்படகுகவிழ்ந்ததில் தேனிலவுதம்பதிகள் தண்ணீரில் மூழ்கி இறந்தனர்

குஜராத் மாநிலத்தைச் சேர்ந்த தம்பதிகள் தீபக் நவஜீன் இவர்களுக்கு சமீபததில்தான் திருமணம் நடந்தது.

தேனிலவிற்காக இவர்கள் கொடைக்கானலுக்கு வந்தனர்

அங்குள்ள ஏரியில் உல்லாசமாக படகு சவாரி செய்ய விரும்பினர்.

படகு ஓட்ட யாரும் வேண்டாம் என்றும், தாங்களே படகு ஓட்டிக் கொளளுவதாகவும் கூறி விட்டு அவர்கள் படகில்சென்றனா

படகு ஏரியின் நடுவில் சென்றபோது கவிழ்நதது தீபக்கும், நவஜீவனும தண்ணீரில் மூழ்கி இறந்தனர்.

[illegible] உடல் மீட்கப்பட்டுள்ளது தீபக்கின தேடும் பணி நீடித்து வருகிறது

போலீசார் இவ்விபத்து குறித்து விசாரித்து வருகிறார்கள்.

## இமாலயப் பகுதிகளில் ஒரு இமாலயத் தவறு: வளமான காடுகள் அழியும் கொடுமைகள்

புதுடெல்லி, ஏப். 21— இமயமலையை யொட்டியுள்ளபகுதிகளிலகாடுகள் அழிந்து வருகின்றன. இது மாபெரும் தவறாகும் உடனடியாக மரஞ்செடிகள் அங்கே நடப்பட்டு காடுகள் வளர்க்கப்பட வேண்டும் இல்வாவிட்டால மனித இனமும் கால்நடைகளும் அந்தப்பகுதியில் பெரும் அளவில் பாதிக்கப்படும் [illegible] இயற்கை [illegible] லாக்கி— பருவகாலத்தை செழிக்கச் செய்து மழையைப் பெய்யச் செய்வது காடுகள் தாம்.

இந்த வனவளம் இமாலயப்பகுதிகளில் கொஞ்சம் கொஞ்சமாக அழிந்து வருகிறது. சில ஆண்டுகளுக்கு முன்பு வளமாக இருந்த மரம், செடி கொடி வகைகள்சாய்ந்து கிடக்கின்றன வானததை முட்டிக்கொண்டிருந்த பலவேறு வகை மரங்களும் அப்படியே சாய்ந்து போய் [illegible] மாகக் காட்சி அளிக்கின்றன.

இமாலயப் பகுதிகளில் சுமார் 3 ஆயிரம் கிலோ மீட்டர் வரை பயணம் செய்து பலவேறு விவரங்களை கண்டறிந்தசிப்கோ இயக்கத் தலைவர் சுந்தாலால் பகுகுணா இத்தகவல்களை தெரிவித்தார். அண்மையில் பதன் கோட் முதல் பித்தோராகர் வரை அவர் பயணம் செய்தார்.

இந்தப் பகுதியில் உடனடியாக மரம், செடி கொடிகள் நடப்பட வேண்டும். காடுகளை பெரும்அளவில் வளர்க்க வேண்டும். காடுகள் அழிக்கப்படுவதை உடனடியாக நிறுத்த வேண்டும். என்று அவர் தெரிவித்தார்.

கொஞ்ச நாட்களுக்கு முன்பு ஓங்கி வளர்ந்திருந்த பச்சைப் பசுமையான ஆயிரக்கணக்கான மரங்கள் வெட்டி சாய்க்கப்பட்டு தரையில் பரிதாபமாகக் காட்சியளிக்குதைக் கண்டு கண்ணீர் விட்டார்.

## குழந்தை நரபலி: மர்ம ஆசாமிக்கு வலைவீச்சு

சென்னை,ஏப் 21— சென்னை எழும்பூர் ரெயில்நிலையம் அருகே 3 வயது குழந்தை கொலையுண்டு கிடநதது தொடர்பாக மர்ம ஆசாமி ஒருவனைபோலீசார் தேடிவருகிறார்கள்.

எழும்பூர் அருகே உள்ள வாதராஜ புரத்தைச் சேர்ந்தவர் சாமந்தி. இவரது 3 வயது மகன் பாலாஜி.

கடந்த 19ந்தேதி காலை முதல் பாலாஜியைக் காணவில்லை.

இதற்கிடையில் எழும்பூர் [illegible] யில் நிலையம் [illegible] சில [illegible] அகேடமி [illegible] ருசி விளையாட்டுத் திடலில் புதர் பகுதியில் பாலாஜியின் பிணம் கிடந்தது தெரிய வந்தது

போலீஸ் நாய் துப்பு துலக்க கொண்டு வரப்பட்டது நாய் அருகில் இருந்த கோவிலையே சுற்றி வந்தது

இதனால்பாலாஜி நரபலி கொடுக்கப் பட்டிருக்கலாம் எனகருதப்படுகிறது.

வரதராஜபுரம் பகுதியில் ஓர் மர்ம ஆசாமி கடந்த நாட்வந்கவி [illegible] ட்டுததாக சாரணைளண யில் தெரிய வந்துது.

அந்த ஆசாமியை போலீசார் வலை வீசித்தேடி வருகிறார்கள்.

குறிப்பிட்ட ஆசாமி இரவில அப்பகுதியிலேயே நடை பாதையில் படுத்திருந்ததாகவும் கூறப்படுகிறது.

மர்ம ஆசாமி பேண்ட்டு சட்டையும் அணிந்திரும்



புகழ்

புகழ் பெறுதல் தவறல்ல; தலைக்கனந்தான் தவறு. எனவே அமைதியுடன் தொண்டு புரிந்து புகழ் பெறுவோம்.

—பேரறிஞர் அண்ணா



ஒளி

இருள் நீங்கி ஒளி பெறவே அனைவரும் விரும்புவர். வறுமை இருள் நீங்கி செல்வ ஒளி பெறுவோமாக.

— தந்தை பெரியார்

## பிள்ளைப்பாக்கம் மூர்த்திக்கு பாராட்டு விழா

சென்னை, ஏப் 21— ஸ்ரீபெரும்புதூர் பஞ்சாயத்து யூனியன் தலைவர் பிள்ளைப்பாக்கம் கே. மூர்த்திக்கு இராணி சீதை மன்றத்தில் பாராட்டு விழா நடைபெற்றது.

இவ்விழாவில் அமைச்சர் ஒய். எஸ். எம். யூசுப், மேலவைக் கொறடா ஜேப்பியார், மண்ணடி கிருஷ்ணமூர்த்தி கு. கஜேந்திரபாபு, துரை. மொய்தீன் எல்லப்பன், குமார், நடராசன், கண்ணன் எம். வி. ராமன் ஆகியோர் கலந்து கொண்டுபாராட்டிப் பேசினர்.

ஒய். ஜி. மகேந்திரன் குழுவினரின் நாடகமும் நடைபெற்றது. ஜமால் புகாரி நன்றி கூறினார்.

# தமிழைப் பயிற்சி மொழியாக கொண்ட பொறியியல் கல்லூரி

## தஞ்சை தமிழ் பல்கலைக்கழகம் முயற்சி

சென்னை, ஏப் 21— தமிழை பயிற்சிமொழியாகக் கொண்ட கல்லூரி ஒன்றை துவக்க தஞ்சை தமிழ் பல்கலைக்கழகம் முயற்சித்து வருவதாக அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

சட்டசபையில் கல்வி மான்யம் குறித்த விவாதத்திற்கு பதிலளிக்கையில் அமைச்சர் அரங்கநாயகம் கூறியதாவது:—

தமிழ்ப் பல்கலைக் கழகம் மூலம் கலைக் களஞ்சியம் வெளியிட ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

வாழ்வியல் 16 தொகுப்பும் அறிவியல் 20 தொகுப்புமாக வெளியிடப்படும் தொழில் நுட்பக் கல்வி நிலையங்களில் பயிற்சி மொழி தமிழாக இருக்கும் திட்டம் நடைமுறைபடுத்தப்பட்டுள்ளது. ஆங்கிலம், தமிழ் மொழிகளில் பயிலும் மாணவர்கள் பெருமான்மையினர் தமிழில் எழுத வாய்ப்பு ஏற்பட்டுள்ளது

பொறியியல, மருத்துவக்கல்லூரிகளுக்கானதமிழ் பாடநூலகளை தமிழ் பல்கலைக்கழகம் தயாரித்து வருகிறது. தமிழைபயிற்சி மொழியாகக் கொண்ட பொறியியல் கல்லூரி ஒன்றை துவக்க தமிழ் பல்கலைக்கழகம் முயற்சித்து வருகிறது. தனியார் சார்பில் நடைபெறும் கல்வி நிலையங்கள் பற்றி இங்கே குறிப்பிட்டுள்ளார்கள்.

ஒரு மாநிலத்தின் முன்னேற்றம் தொழில் முன்னேற்றத்தைப் பொறுத்திருக்கிறது.

ஜப்பான், ஜெர்மனி போன்ற நாடுகள் தொழில ஆற்றலில் முன்னேற்றம் பெற்றதால் தான்தொழில் முன்னேற்றம் பெற்றுள்ளது. தொழில் ஆற்றல் தான் முக்கியம்.

6வது ஐந்தாண்டு திட்டத்துக்கு 90 ஆயிரம் கோடி ரூபாய் செலவழிக்கப்பட்டது. 7வது ஐந்தாண்டு திட்டத்துக்கு ஒரு லட்சத்து 80 ஆயிரம் கோடி ரூபாய் செலவிடப்படவிருக்கிறது திட்டச் செலவு இரண்டு மடங்காக உயர்ந்திருக்கிறது

அதைநிறைவேற்றமனித ஆற்றல் 2 மடங்காக உயர வேண்டும்.

15ஆண்டு காலமாக ஒரு பொறியியல் கல்லூரி ஒரு பாலிடெக்னிக் கூட ஆரம்பிக்க முடியவில்லை.

தொழில்கல்வி அந்த அளவுக்கு கட்டுப்படுத்தப்பட்டிருந்தது. தொழில் முன்னேற்றத்துக்கு அது தடையாக இருந்தது

தமிழநாட்டில் தனியார் துறை மூலம் கல்வி நிலையங்கள் நடத்துவது மிகப் பெரிய தவறு என்று கருதுவது சரியல்ல தனியார் துவக்கும் கல்லூரிகளிலும் 50 சதவிகித இடங்கள் மார்க்குகள் ஜாதி விகிதாசார அடிப்படையில் சேர்க்க வேண்டும என்ற நிபந்தனை இருக்கிறது

அந்த மாணவர்களை நாம் தேர்ந்தெடுத்து அனுப்புகிறோம்.

இரண்டு தனியார் கல்லூரி வந்தால் ஒரு அரசுக் கல்லூரியில் உள்ள பயன் கிடைக்கிறது.

தனியார் கல்லூரிகளில் கொள்ளையடிக்கிறார்கள் என்று சொலவது சரியல்ல

### பொறியியல் கல்லூரி

ஒரு பொறியயல்கல்லூரி துவக்க 3 முதல் 4கோடி ரூபாய் தேவைப்படுகிறது ஆண்டுக்கு 25 லட்சம் ரூபாய்இதற்கு செலவு ஆகும

பாலிடெக்னிக் துவக்க ஒன்றரை முதல 2கோடி ரூபாய் செலவாகிறது. இது தவிர 8லட்சம ரூபாய் செலவாகும்.

பணம் சம்பாதிப்பது தான் நோக்கம் என்றிருந்தால அவர்கள் வேறு தொழில்நடத்தப்போவார்கள் கல்விக்காக சேவா மனப்பான்மையுடன் இந்தப் பணிக்கு வந்திருக்கிறார்கள். தனிப்பட்டவர்களின்பணம் தவறான வழியில் போகாமல் இப்படிப்பட்ட கல்விப் பணிக்கு வருகிறது.

தனியார் கல்லூரிகளில் 50 சதவிகித இடத்தை நாம தேர்ந்தெடுக்கிறோம் மீதி இடங்களை தான அவர்கள் இஷ்டத்துக்கு விடுகிறோம்.

சீனநாடு தீவிர கம்யூனிஸ்ட் ஆட்சி நடக்கும் நாடு அங்கும்கூட தனிப்பட்ட சேவா நிறுவனங்கள் கல்வி நிறுவனங்களை ஆரம்பிக்கலாம் என்று முடிவு எடுத்திருப்பதாக செய்தி வந்திருக்கிறது.

தனியார கல்விநிறுவனங்கள் நன்றாக நடப்பதாக ஒரு கருத்து இருக்கிறது. அதை நாம் பயன்படுத்திக் கொள்ளுகிறோம்.

போனவாரம்கூடமத்திய அமைச்சர் வசந்த் சாத்தே ஒரு கருத்தைச் சொல்லியிருக்கிறார்.

நாட்டில்50ஆயிரம் கோடி கறுப்புப்பணம் இருப்பதாகவும் அதைக்கொண்டு தனியார் மின் உற்பத்தி நிலையங்கள் உருவாக்கலாம் என்றும் சொல்லியிருக்கிறார்

அதே கருத்தில் தான் தனியார் பணத்தை கல்விப்பணிக்காகசெலவிட வைக்கிறோம. தனியார் நடத்தும் கல்லூரிகள் தரம் இல்லாமல்இருந்தால்அதை ஒன்றுதரமாகநடத்தவேண்டும் இல்லா விட்டால் மூடிவிட வேண்டும் என்று தெரிவிக்க இருக்கிறோம்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

## அமைச்சர் நிகழ்ச்சிகள்

### நல்லுசாமி

ஏப் 22-ம் தேதி மாலை தஞ்சை தமிழ் பல்கலைக் கழகத்தில் தமிழ்க் களஞ்சியப் புத்தக வெளியீட்டு விழா.

இரவு 8 மணி செந்தண்ணீர்புரம் புதிய பள்ளிக் கட்டடம் திறப்பு விழா

இரவு 9 மணி செம்பட்டு புதிய பள்ளிக் கட்டடத் திறப்பு விழா.

## ஊர்தி ஓட்டுனர் சங்க நிர்வாகிகள் தேர்தல்

சென்னை, ஏப். 21— தமிழ்நாடு அரசு ஊர்தி ஓட்டுநர்கள் சங்கத்தின் சென்னை மாவட்ட பிரிவுத் தலைவராக சி தியாகராஜன் துணைத்தலைவராக என். ஆறுமுகம், செயலாளராக வி. எஸ். எஸ். சையத்மீர். துணைச் செயலாளராக ஜி. சீதாராமன். பொருளாளராக ஆர், திருவேங்கடம், அமைப்புச் செயலாளராக எ. எம் மொகிதீன் தணிக்கையாளராக எஸ். கே தனபால. மற்றும் 5 மாநில செயற்குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

## ஏல விற்பனை

1) Sukanraj Mahaveer chand Jain, No 546. P. H. Road, Arumbakkam, Madras-106 (1-8-84 முதல் 30-11-84 வரை) ஏலத்தேதி 2-5-86 அன்று காலை 10 மணிக்கு

2) R. Hanuman prasad No 4, Constable Road, Madras-23 (1-2-84 முதல் 31-12-84 வரை) ஏலத் தேதி 2-5-86 அன்று, காலை 11 மணிக்கு

3) G. Gawarchand Jain No 15, Gajapathi Naidu street, Shenoy Nagar, Madras-30 (1-9-81 முதல் 31-1-85 வரை) ஏலததேதி 2-5 86 பகல் 12 மணிக்கு

4) Sajianbai, No 20, Chandrappan Mudaly Street, Madras-79 (1-11-81 முதல் 28-2-85 வரை) ஏலத் தேதி 5-5-86 காலை 10 மணிக்கு

5) C. Preamraj Jain, No 1, Erullappan Street, Madras-79 (1-11-83 முதல் 28-2-85 வரை) ஏலத்தேதி 5-5-86 காலை 10 மணிக்கு

6) c Jabarchand Jain, No 116. Annapillai Street. Madras-79 (1-6-82 முதல் 31-12-84 வரை) ஏலத்தேதி 5-5-86 காலை 11 மணிக்கு

7) J. Champalal No 1, Erulappan Street, Madras-79 (1-8-83 முதல் 31-12-84 வரை) ஏலத்தேதி 5-5-86 பகல் 12 மணிக்கு

8) C. Vasanthraj Jain, No 52, Perumal Koil Garden Street, Madras-79 (1-3-83 முகல் 31-12-84 வரை) ஏலததேதி 5-5-86 மதியம் 1 மணிக்கு

9) Tarachand Balakrisha & Co No 9.C Muthaiappa Gramani Street Chepet Madras-30 (1-9-84 முதல் 31-3-85 வரை) ஏலத்தேதி 6-5-86 காலை10 மணிக்கு.

10) Ratan Chand Jain No-178/c T, V Nagar ThirvmangalamMadras-40 (1-7-84 முதல் 28-2-85 வரை) ஏலத்தேதி 6-5-86 காலை 11 மணிக்கு.

11) C. Vasanthraj Jain, No 24, M. T. H. Road, Villivakkam, Madras-49 (1-12-79 முதல் 31-8-82 வரை) ஏலத்தேதி 6-5-86 பகல் 12 மணிக்கு

12) Mahaveer chand Jain, Plot No 677, Shop 4, East Main Road, West Anna nagar, Madras-101 (1-6-83 முதல் 31-3-85 வரை) ஏலத்தேதி 7-5-86 காலை 10 மணிக்கு

13) S. Gyanchand Jain No 11, Pilkington Road Ayanavaram, Madras-23 (1-8-84 முதல் 28-2-85 வரை) ஏலத்தேதி 8-5-86 காலை 10 மணிகக

14) V. Ghisulal & Co, No 100, Decaster Road, Pulianthope, Madras-12 (1-5-82 முதல் 31-12-84 வரை) ஏலத்தேதி 8-5-86 காலை 11 மணிக்கு

15) Pukaraj & Co, No-95, Market Street, Perambur, Madras-11 (1-11-81 முதல் 31-3-84 வரை) ஏலத்தேதி 9-5-86 காலை 10 மணிககு

16) MangilalJain No-45, Gandhi Street, West Mambalam, Madras-33 (1-6-84 முதல் 31-3-85 வரை) ஏலத்தேதி 9-5-86 மதியம் 1 மணிக்கு

17) Ghisulal Deepchand No 1, 1st Street, Jaganathapuram, Chepet, Madras-31 1-7-84 முதல் 28-2-85 வரை) ஏலத்தேதி 16-5-86 காலை 10மணிக்கு

18) A. Ghisulal & Sons No 125, P.H. Road, Koyambedu, Madras-107 (1-7-84 முதல் 28-2-85 வரை) ஏலத்தேதி 16-5-86 காலை 11 மணிக்கு

19) A Ghisulal & Co No 1, 1st Street, Jaganathapuram, Chepet, Madras-31 (1-6-84 முதல் 28-2-85 வரை) ஏலத்தேதி 16-5-86 பகல் 12 மணிக்கு

20) Ghisulal Subash Chand No-125, P.H. Road, Koyammedu Madras-107. (1-7-84 முதல் 28-2-85 வரை) ஏலததேதி 16-5-86 மதியம் 1 மணிக்கு.

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கிகாரம் பெற்ற ஏலத்தாரர் M. தரமசந்த்ஜெயின 150 சசகுதானந்தம் தெரு, சென்னை-12 ல் மாவட்ட ஆட்சியாளரின் உத்தரவுப்படி மேற் குறிப்பிட்ட ஏலத் தேதிகளில் ஏலம் போடுவார்.



# சத்துணவு திட்டத்துக்கு மத்திய அரசு நிதி உதவி: அண்ணா நம்பி கோரிக்கை

புதுடெல்லி ஏப். 21 சத்துணவு திட்டத்தை மத்திய அரசு திட்டச் செலவாக ஏற்று நிதி ஒதுக்க வேண்டுமென்று நாடாளுமன்றத்திலகழக உறுப்பினர் அண்ணா நமபி வலியுறுத்தினார்

உணவுப்பொருள்வழங்கு துறை அமைச்சக மானியக் கோரிக்கை மீது நாடாளுமன்றத்தில் கழக உறுப்பினர் அண்ணாநம்பி பேசியதாவது:-

அரசியல புரட்சிக்குப் பின்பு பொருளாதாரப் புரட்சி நடந்தே திரவேண்டும். அந்தப புரட்சியினுடைய முதற்படியே உணவுத்துறையில் நாம் தன்னிறைவு பெறுவது என்றார்மறைந்த இந்தியப் பிரதமர் ஜவகர்லால்நேரு அவருடைய கனவை நனவாக்க மத்திய அரசுதயாராக வேண்டும். அதேபோல் குழந்தைகள் மீது மிகுந்த அன்பு கொண்டிருந்தார் நேரு. அந்தக் குழந்தைகளுக்கு தமிழக முதல்வா டாக்டர் புரட்சித்தலைவர் னமும் இலவச சத்துணவு கொடுக்கிறார்.

இந்த சத்துணவுத் திட்டத்தை மத்திய அரசு திட்டச்செலவாக ஏற்று நிதி ஒதுக்கிட வேண்டும. மேலும் இத்திட்டத்திற்கு மத்திய இருப்பில் இருந்து அரிசிஒதுக்கிடவும் வேண்டுகிறேன.

தமிழக அரசு உணவு உற்பத்திக கொளகையில்தீவிரமாக திட்டமிட்டு செயல் படுகிறது தமிழக முதலவரான டாக்டர எம். ஜி. ஆர். அவர்கள் 1977-ல் பொறுப்பேறற போது உணவு உற்பத்தி 62 லட்சம டன்னாக இருந்ததை 80 லட்சம் டன்னாக உயர்த்த திட்டமிட்டு செயல்படுத்துகிறார். இதன் காரணமாய் இப்பொழுது மற்ற மாநிலங்களைவிட ஒரு கிலோ அரிசி ரூபாய் 2-15க்கு பொது மக்களுக்கு சிறு கடைகளில் கூட கிடைக்கிறது.

### சலுகைகள்

இப்படி உற்பத்தியாவதறகு காரணம் தமிழக விவசாயிகளுக்குபலசலுகைகளை தமிழக அரசு அறிவித்தது தான் 1-யூனிட் மின்சாரத்தை 16-காசில் இருந்து 12 காசாகக் குறைத்தது; பணப்பயிருக்கு வரியில்லை என அறிவித்தது பல பயிர்களுககு வரிச்சலுகை-ஏழை விவசாயிகளின் கூட்டுறவுக் கடனகளை ரத்து செய்தது விவசாயத் தொழிலாளர்க்கு வேட்டி சேலை கொடுத்தது போன்ற காரணத்தால் விவசாயிகளின் வேதனையைக குறைத்து உணவுஉற்பத்தியை பெருக்கியுள்ளார். அப்படிப்பட்ட தமிழக அரசுக்கு ஒரு சோதனைவரும்போது மத்திய அரசு காக்க வேண்டியது தன் கடமையென உணரவேண்டும். அத்தியாவசியப்பொருட்கள் நியாய விலைக்கடைகளில் தாராளமாகக் கிடைக்க மத்திய அரசு நடவடிக்கை எடுக்க வேண்டுகிறேன்.

1985ம் ஆண்டு நியாய விலைக் கடைகள் மூலம் விநயோகம செய்யப்பட்ட உணவு தானியங்கள் அளவு 1.54,50 000 டன்களாகும். நமது நாட்டின் மொத்த ஜனத் தொகையில் 60% மக்கள் அதாவது42 கோடி மக்கள் வறுமைக்கோட்டின் கீழுள்ளார்கள் என்று மத்திய திட்டக்கமிஷனே ஒப்புக்கொண்டுள்ளது.

42 கோடி ஏழை எளியவர்களுக்கு ஒரு கோடியே 54 லட்சத்து 50 ஆயிரம் டன்கள் உணவுதானிய பொருட்கள் பொது வினியோகத்துறை மூலம் வினியோகிக்கப்படுகிறது

### தாராள உணவுப் பொருள் சப்ளை

மத்திய அரசால் பொது வினியோகத்துறையைபலப்படுத்த முடியாது இது மாநில அரசுகளால்தான் முடியும், எனவே மாநில அரசுகள் கேட்கும் உணவு தானியங்களின் அளவைக் குறைக்காமல் கொடுக்க மத்திய அரசு முன்வர வேண்டும் மத்தியஇருப்பில் இருந்து இதனை மாநில அரசுகளுக்கு ஒதுக்க வேண்டும்

கிராமங்களில் பொருளாதார முன்னேற்றத்தை கவனிக்க ரூரல் டெவலப்மெண்ட் அமைச்சகம் மத்தியில் இருக்கிறது. கிராமங்களில், நியாய விலைக்கடைகள் திறக்காமல் இருப்பதற்கு முக்கிய காரணம் உணவுதானியங்கள் மாநில அரசுகள்கோரும் அளவுக்கு மத்திய அரசால்கொடுக்கப்படாததேதான்.

செயல் அளவில் கிராம முன்னேற்றத்தை கவனிக்க முதன் முதலில எல்லா கிராமங்களிலும் நியாய விலைக்கடைகளைத் திறக்க மத்திய அரசு நடவடிக்கை எடுக்கவேண்டும

அடுத்து 1985-86 ஆம் ஆண்டில் உணவு வழங்கு துறைக்கு கொடுக்கப்பட்ட உதவித் தொகை ரூபாய் 1650- கோடி. எப்.சி. ஐ யில் லஞ்ச ஊழல் அதிகரித்து சென்ற மாதத்தில் நாடுமுழுவதும் உள்ள எப்.சி.ஐ அதிகாரிகளின் வீடுகள் சோதனை செய்யப்பட்டு பல கோடிகள் மதிப்புள்ள பொருட்கள் கைப்பற்றப்பட்டுள்ள செய்தி அமைச்சருக்கும் தெரிந்திருக்கும். இவ்வாறு தவறுசெய்த அதிகாரிகள் எத்தனைபேர் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது என்பதை அமைச்சர இந்த அவைக்குத் தெரிவிக்கவேண்டும்.

இப்படிப்பட்ட கள்ளக் கடத்தல், பதுக்கல்காரர்களைக் கண்டுபிடித்து கடுமையாகத் தண்டிக்க வேண்டும். அப்போதுதான நாடு உருப்படியாகும்.

தட்டுப் பாட்டில் நிரந்தரமாகக் சிக்குவது மண்ணெண்ணெய் தான் இதனால் ஏழை மக்கள் மிகவும்பாதிக்கப்படுகிறார்கள். கிராமப்புறங்களில் பெரும்பாலும் மக்கள் இந்த மண்ணெண்ணையைதான் பயன் படுத்துகிறார்கள் குறிப்பாக விளக்கு எரிப்பதற்கும் ஸ்டவ் எரிப்பதற்கும் பயன் படுத்துகிறார்கள்

இந்தமண்ணெண்ணெய் தட்டுப்பாட்டினால்மட்டும் அல்லாது குடிசையில் குடியிருக்கும் ஏழை தன்வீட்டுக்கு மின்விளககு அமைக்கும் வசதியில்லாதவன். எனவே இத்தகைய ஏழைக் குடிசைவாசிகளுக்கு தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவர் ஒவ்வொரு குடிசைக்கும் ஒரு இலவச மின் விளக்குத் திட்டத்தைக் கொண்டு வந்து தமிழகத்தில் உள்ள கிராமங்கள்தோறும நறைவேற்றி வருகிறார். இத்திட்டத்தை செயல்படுத்த மத்திய அரசு தமிழக அரசுக்கு நிதி ஒதுக்கீடு செய்ய வேண்டுகிறேன்

என் தொகுதியான பொள்ளாச்சி நாடாளுமன்றத்தில் உடுமலைத் தொகுதியில் கிருஷ்ணாபுரம் என்ற பகுதியில் அமராவதி கூட்டுறவு சர்க்கரை ஆலை இருக்கிறது இதுபோன்ற ஒரு சர்க்கரை ஆலையை கோயமுத்தூர் அல்லது அதனை அடுத்துள்ள தொண்டாமுத்தூரில் கூட்டுறவு முறையில் அல்லது தனியார் துறையிலாகிலும் துவக்கிட வேண்டுகிறேன்

விவசாயம் சார்ந்த தொழிற்சாலைகளை தமிழகத்தில நிறுவ வேண்டும்.

இவ்வாறு கோவை அண்ணா நம்பி நாடாளுமன்றத்தில் பேசினார்.



# லிபியாவில் அணி சேரா நாடுகள் குழுவிற்கு வரவேற்பு

புதுடெல்லி, ஏப். 21- லிபியாமீது ஆக்ரமிப்பு செய்து போர் தாக்குதலைத தொடுத்த அமெரிக்காவை அணிசேரா நாடுகள் கண்டனம செய்துள்ளன. அணிசேரா நாடுகளின் வெளிவிவகார அமைச்சா குழுமத்திய அமைச்சர் பகத தலைமையில் திரிபோலி வந்தடைந்தது

அணிசேரா நாடுகள் இயக்கத்தில லிபியா உறுப்பினராக இருக்கிறது. லிபியா மீது அமெரிக்கா நடத்திய தாக்குதலை அணிசேரா நாடுகள் உள்பட பல்வேறு நாடுகளும் கண்டனம் செய்துள்ளன.

புதுடெல்லியில் நடைபெறற அணிசேரா நாடுகளின் மாநாட்டிலும் அமெரிக்காவுக்கு கண்டனம் தெரிவககப்பட்டது

அமெரிக்காவின் போர் வெறித் தாக்குதலை கண்டனம் செய்து அணி சேரா நாடுகள் மாநாட்டில் தீர்மானம நிறைவேறியது.



### பயணம்

அணி சேரா நாடுகள் அமைபபுக்கு இந்தியா தலைமை வகிக்கிறது

புதுடெல்லியில் நடைபெற்ற அணி சேரா நாடுகளின் வெளிவிவகார அமைச்சர்கள் மாநாடு நேற்று முடிவடைந்தது.

அணிசேரா நாடுகள் இயக்கத்தைச் சேர்நதஇந்தியா, யூகோஸ்லேவியா கியூபா. கானா, செனேகல், காங்கோ. ஆகிய ஆறு நாடுகளின் வெளிவிவகார அமைச்சர்குழு மத்திய வெளிவிவகார அமைச்சர் பி. ஆர். பகத் தலைமையில் லிபியாவுககுச் வந்தது

குழுவினரை கமாண்டர் ஹம்மதி தொழிலமைச்சர் பார்காசாய் ஆகியோர் வரவேற்றனர்.

அமெரிக்க தாக்குதலால் பாதிக்கப்பட்ட பகுதிகளையும் அந்தக் குழு நேரில் கண்டறியும்

புதுடெல்லி மாநாட்டில் ஏற்பட்ட தீர்மானத்தையும் அநதக்குழு லிபிய ஜனாதிபதி கடாபியிடம் கொடுக்கும்

அணி சேரா நாடுகள் அமைப்பைச் சேர்ந்த பல்வேறு நாட்டு அமைச்சர்களும் லிபியாவுக்குச்செல்ல விருப்பம் தெரிவித்தனர்

ஆயினும்ஆறு நாடுகளைச் சேர்ந்த அமைச்சர்கள் மட்டுமே லிபியா செல்லுவது என்று முடிவாயிற்று

திரிபோலியில் ஜனாதிபதி கடாபியை குழுவினர் சந்தித்துப் பேசுவார்கள்

பகத் தலைமையிலான குழுவினர் திரிபோலியில் அமெரிக்க தாக்குதலால்ஏற்பட்ட சேதங்களையும் கண்டறிவார்கள்.



Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India AnnaD.M.K.Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS-29.

## ஜப்பான் உதவியோடு தமிழக அரசின் புதுதிட்டம்

# காவிரியில் மின் உற்பத்தி

**புதுடெல்லி, ஏப். 21- காவிரி ஆற்றில் ஓடும் தண்ணீரில் இருந்து 9இடங்களில் மின்சார உற்பத்தி நிலையங்கள் அமைக்க தமிழகஅரசு ஏற்பாடு செய்துள்ளது. முதற் கட்டமாக ரூபாய். 164 கோடியில் இத்திட்டம் செயல்படுத்தப்படுகிறது.**

தமிழகத்தின் மின்சாரப் பற்றாக்குறையை சமாளிக்க மின்சார வாரியம்ஜப்பான் நாட்டு உதவியுடன் மின் உற்பத்தி நிலையங்களை அமைக்க முற்பட்டுள்ளது.

ஓடும் ஆற்று தண்ணீரில் இருந்து மின்சாரம் தயாரிக்கப்படும்.

இந்தியாவிலேயே முதல் தடவையாகஇப்படிப்பட்ட மின் உற்பத்தி நிலையங்கள் அமைக்கப்படுகின்றன

முதல்கட்டமாக ரூபாய் 164.6 கோடியில் இத்திட்டம் செயல்படுத்தப்பட இருக்கிறது.

மேட்டூர் அணையில் இருந்து காவிரியில் பாசனத்திற்குத் தண்ணீர் திறந்து விடப்படுகிறது

அப்படி மேட்டூரில் இருந்து செல்லும் காவிரி ஆற்றில் 9 இடங்களில் சாதாரண நீரோட்ட சக்தியில் இந்த மின் நிலையங்கள் உருவாகும்.

சேலம், பெரியார்மாவட்டங்களில் இந்த மின் நிலையங்கள் அமையும்.

இதற்கான ஜெனரேட்டர்களை ஜப்பான் அளிக்கிறது.

முதல் மின்நிலையம் 30 மெகாவாட் உற்பத்தித் திறன் கொண்டது இது டிசம்பரில் உற்பத்தியை துவக்கும்.

### அடுத்த ஆண்டில் உற்பத்தி

மேலும் 4 நிலையங்கள் அடுத்தஆண்டில் உற்பத்தியை துவங்கும்.

இவற்றின் மூலம் 53 கோடியே 7லட்சம யூனிட் மின்சாரம் உற்பத்தியாகும்

நெருஞ்சிப் பேட்டை அருகே 2 மின்நிலையமும், கோனேரிப்பட்டி அருகே 3 இடங்களிலும்ஊராட்சிக் கோட்டை அருகே 4 இடங்களிலும் இத்தகைய மின் உற்பத்தி நிலையங்கள் அமைகிறது.

---

### பொருட்காட்சி அரங்கில் சிறுசேமிப்பு: ரூபாய் 18 கோடிக்கு பத்திரம் விற்பனை

சென்னை, ஏப். 21— சென்னையில் கடந்த 102 நாட்கள் நடைபெற்று முடிந்த சுற்றுலா பொருட்காட்சியில் தமிழ்நாடு சிறுசேமிப்பு பத்திரங்கள் 18 கோடியே 32 லட்சம் ரூபாய்க்கு விற்பனை ஆகியுள்ளது.

இது சென்ற ஆண்டை விட 2 மடங்கு அதிகம். சிறுசேமிப்பு பரிசு குலுக்கலும் நடைபெற்றது.

---

### ஊராட்சி ஒன்றிய தலைவர்கள் கருத்தரங்கு

சேலம், ஏப். 21— சேலம் மாவட்டத்தில் கழகத்தின் சார்பில்வெற்றி பெற்ற ஊராட்சி ஒன்றியம் மற்றும் பேரூராட்சி மன்ற நகராட்சி மன்றத் தலைவர்களின் கருத்தரங்கு வருகிற 27ம் தேதி காலை 10 மணி யளவில் நடைபெறுகிறது.

இக்கருத்தரங்கில் அமைச்சர்கள் ராசாராம், காளிமுத்து ஆகியோர் பங்கேற்கின்றனர்.

சேலம்தமிழ்ச்சங்கமண்டபத்தில் நடைபெறும் இவ்விழாவிற்கு அமைச்சா ராசாராம் தலைமை வகிக்கிறார்.

அமைச்சர் காளிமுத்து கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றுகிறார். இக்கருத்தரங்கில் உள்ளாட்சி மன்றங்களில் நாம் மேற்கொள்ளும் பணிகள் பற்றி ஆராய்கிறார்கள். இது குறித்து சேலம் மாவட்டச் செயலாளர் (தெற்கு) கே. பி. செல்வராசு விடுத்துள்ள ஓர் அறிக்கையில் கூறியிருப்பதாவது:

சம்பந்தப்பட்ட தலைவர் உறுப்பினர்கள் சட்டமன்ற உறுப்பினர்கள்அனைவரும் இக்கருத்தரங்கில் கலந்து கொண்டு சிறப்பிக்க வேண்டும்.

இவ்வாறு கே.பி. செல்வராசு கூறியுள்ளார்.

---

# இலங்கையில் அணை உடைந்து 100 தமிழர்கள் பலி: கிராமங்கள் மூழ்கின

கொழும்பு,ஏப் 21— இலங்கை திரிகோணமலைப்பகுதியில் அணை ஒன்று திடீரென்று உடைந்ததால நூற்றுக்கும் மேற்பட்ட தமிழர்கள் வெள்ளத்துக்கு பலியாகினர். பல கிராமங்கள் வெள்ளநீரில் மூழ்கின.

இலங்கை திரிகோணமலை மாநிலத்தில் கந்தாலை என்கிற நகரின் அருகே ஒரு அணைக்கட்டு உள்ளது. இந்த அணையின் கரை திடீரென்று நேற்று இரவு இடிந்து விழுந்தது இதனால் வெள்ளம் பெருக்கெடுத்து நகருக்குள் புகுந்தது.

அருகிலுள்ள கிராமங்களிலெல்லாம் இந்த வெள்ளம் புகுந்து சேதத்தை விளைவித்து விட்டு தாம்பள-காமம் என்னும் கிராமம் அருகே கடலில் கலந்தது.

### சாலைகள் பாதிப்பு

அணையிலிருந்து கரை உடைந்து சென்ற வெள்ளம் கந்தாலை - திரிகோணமலை சாலையில் பல இடங்களில உடைப்பு ஏற்படுத்தியது. திரிகோணமலையை கொழும்புடன் இணைக்கும் மிக முக்கியமான நெடுஞ்சாலையும் இந்த வெள்ளத்தால சேதமடைந்தது.

இந்த பயங்கர வெள்ளத்தில் 15 ஆயிரம் போ சிக்கியுள்ளதாகக் கூறப்படுகிறது. 50 ஆயிரத்திற்கும் மேற்பட்ட மக்கள் வீடுகளை இழந்துள்ளனர். நூற்றுக்கும் மேற்பட்ட தமிழர்கள் பலியாகியுள்ளனர். ராணுவம்மீட்புப்பணிகளில் ஈடுபட்டுள்ளது

இந்த சம்பவத்திற்கு சதிச் செயல் காரணமா என்றும் விசாரிக்கப்பட்டு வருவதாக ஒரு ராணுவ அதிகாரி தெரிவித்துள்ளார்,

### பணிகள் தாமதம

அணை நள்ளிரவு நேரம் உடைந்ததால் உறங்கிக் கொண்டிருந்த மக்கள் பலர் வெள்ளத்திற்கு பலியாகியுள்ளனர். உயிர்ச் சேதம் அதிகம் இருக்குமென்று அஞ்சப்படுகிறது

அணையிலிருந்து இன்னும் வெள்ளம் சென்று கொண்டிருப்பதாக தெரிகிறது. மீட்புப் பணிகள் முழு வேகத்தில் நடைபெறவிலலை என்றும் செய்திகள் தெரிவிக்கின்றன.

---

### ஊட்டியில் ரூ.13லட்சத்தில் தடுப்பு அணை

சென்னை, ஏப். 21— உதகையில் 13 லட்ச ரூபாய் செலவில் 11 இடங்களில் தடுப்பு அணைகள் கட்டப்பட உள்ளதாக அமைச்சர் யூசுப் தெரிவித்தார்.

சட்டசபையில் கழக உறுப்பினர் உச்சி கேள்விக்கு பதிலளிக்கையில அமைச்சர் ஒய் எஸ் எம். யூசுப் கூறியதாவது:—

நீலகிரி மாவட்டத்தில் மழை நீரை தேங்க வைக்கும் வகையில் சிறுசிறு தடுப்பு அணைகள் (செக்டேம்) கட்டப்பட உள்ளன

7வது ஐந்தாண்டு திட்டத்தில் 216ஏக்கர் நிலத்திற்கு பாசனம் அளிக்கும் வகையில் 12லட்சத்து 78 ஆயிரம் ரூபாய் செலவில் 11 இடங்களில் இத்தகைய தடுப்பு அணைகள கட்டுவதற்கு நடவடிக்கை எடுக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் யூசுப் கூறினார்.

மேலும் ஒரு கேள்விக்கு பதிலளிக்கையில் தஞ்சை மாவட்டதில் ஆற்றுப் படுகைகளில் படர்ந்துள்ள நெய்வேலி காட்டாமணி என்ற செடியை அழிக்க அரசு நடவடிககை எடுத்து வருகிறது இந்த செடியைஒழிக்க யாராவது விஷத்தன்மை வாய்ந்த சக்தியுள்ள மருந்து கயாரித்தால் அதனை பயன்படுத்த அரசுபரிசீலிக்கும் என்றார்

---

# மீனவர்கள் கடன்கள் ரூ.9 கோடியை அரசு ஏற்க பரிசீலனை

### சட்டசபையில் அமைச்சர் கோவேந்தன் அறிவிப்பு

சென்னை. ஏப் .21— சட்டசபையில் மீனளத் துறை மற்றும் பிற்பட்டோர நலத்துறை மானயக் கோரிக்கை மீதான விவாதத்திற்கு பதிலளிக்கையில் அமைச்சர் கோவேநதன் கூறியதாவது:—

தமிழகத்தில் உள்ள 1000 கிலோ மீட்டர் கடற்கரையில் 4 லட்சம் மீனவர்கள் கடலில் மீன்பிடித்து வாழ்கிறார்கள். அன்னிய செலாவணியையும் ஈட்டித் தருகிறார்கள்.

75 ஆண்டு கால வரலாற்றில் மீனவர்கள பிரச்சினையைத் தீர்க்க யாராவது நடவடிக்கை எடுத்திருக்கிறாரகளா என்று பார்த்தால் இல்லை. முதலவர் புரட்சித் தலைவர் தான் மீனவாகள் நலனுக்காக நடவடிக்கை எடுத்திருக்கிறார்

மீனவா காலனிகளுக்கு சாலை போடும் பொறுப்பு நெடுஞ்சாலைத் துறையிடமும், கடல் அரிப்பைத் தடுக்கும் பணி,புயல் பாதுகாப்பு இல்லங்கள் கட்டுவது பொதுப்பணிதுறையிடமும இருந்தது அதனை மீனளத்துறைக்கு முதல் வா புரட்சித்தலைவர் மாற்றி இருக்கிறார்.

படகு வாங்கியதற்காக மீனவாகள் கட்ட வேண்டிய 4 கோடியே 25 லட்ச ரூபாயை வங்கிகளுக்கு அரசே கட்ட வேண்டும் என்று புரட்சித்தலைவா உததரவிட்டுள்ளாா.

அதேபோல படகுகளுக்காக அரசு சார்பில்கொடுக்கப்பட்ட 4 கோடியே 50 லட்சம் ரூபாய் கடனை தள்ளுபடி செய்ய பரிசீலனை செய்துகொண்டிருக்கிறோம்.

மீனவர்களுக்காக குழு அமைக்கப்பட உள்ளது. அந்தக்குழுவின் அறிக்கையின் அடிப்படையில் புதிய படகுகள் வழங்கப்படும்.

கடல் மீனவர்கள் பிரச்சினையை ஆராய மீனவர்குழு அமைக்க உத்தரவிடப் பட்டுள்ளது.

அதே போல் உள்நாட்டு மீனவர்களுக்கும் ஆலோசனைக் குழு அமைக்க உத்தரவிடப் பட்டுள்ளது

மீனவர்களுககு அடையாள அட்டையை வழங்க இருக்கிறோம். இந்த அட்டையைப் பெற்றவர்கள் கூட்டுறவு சங்கத்தில் உறுப்பினாகள் ஆவாாகள். அப போதுதான் அவாகளுக்கு விபத்து காப்புறுதி திட்டத் தொகை ரூபாய் 15 ஆயிரம் கிடைக்கும்

இதுவரை மீனவர் என்ற பெயரில் சிலர் தலைவாகளாக இருந்து அரசின் சலுகைகளை அனுபவித்து வந்தார்கள்-அதனை போககிடும் வகையில புரட்சித் தலைவர் கருத்துப்படி தாலுக்காவுக்கு ஒரு மீனவர் கூட்டுறவு சங்கம் அமைக்கப் படும்.

இதுவரை மீனவாகளுக்காக வழங்கப்பட்ட 1000 படகுகளில் 300 படகை தான் உண்மையான மீனவர்கள் வாங்கியிருக்கிறாாகள் மற்றவைகளை ஆராய குழு போட்டிருக்கிறோம்

இவ்வாறு அமைச்சா கோவேந்தன் கூறினார்.

---

### திருவை அண்ணாமலை நிகழ்ச்சிகள்

ஏப் 21- பிமண்ணன் பேட்டை (சென்னை)

24—மயிலை பகுதி

25—மயிலை — மாங் கொல்லை.

26—எம் ஜி, ஆர், நகர்

28— நுங்கம் பாக்கம் 107வது வட்டம்

---

# 110 வயதான தமிழக மூதாட்டிக்கு தென்னாப்பிரிக்காவில் பாராட்டு

டர்பன், ஏப். 21— சுமார் ஒரு நூற்றாண்டு காலத்திற்கு முன்பு எஸ். எஸ். 2ம் ஷிண்டோ என்ற கப்பலில் செங்கற்பட்டு மாவட்டம்செய்யூர் கிராமத்தைச் சேர்நத கணவனும், மனைவியும் 4 வயது பெண் குழந்தையோடு வேலைதேடி தென்னாப்பிரிக்காவிற்குச சென்றனர்.

முனியப்மாள் என்ற அந்தப் பெண் குழந்தை அங்கேயே வளர்ந்து திருமணம் செய்து கொண்டு வாழ்ந்தார்.

தற்போது முனியம்மாவிற்கு 110 வயதாகிறது.

90வயதில் முனியமமாவின் கணவர் மதுரே இறந்துவிட்டார.

முனியம்மாவிற்கு 11 குழந்தைகள், மற்றும் பேரன் பேத்திகள் கொள்ளு பேரன்கள் பேத்திகள் 116 பேர்கள் உள்ளனர்.

டர்பன் தமிழ் சங்கத்தின் சார்பில் முனியம்மாவிற்கு பாராட்டு விழா நடநதது.

12 வயதில் கரும்புத் தோட்டத்தில் வேலை செய்யத் தொடங்கிய முனியம்மா ஏராளமான பொது நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டுள்ளார்.

---



## புரட்சித்தலைவரின் புனிதப் பாதையில் புழுதி வாரித் தூற்றும் பொல்லாங்கு மனம்படைத்தவர்களின் போலித்தனத்தைத் தோலுரித்துக் காட்டும்



பரபரப்பான

# பட்டி மன்றம்

பட்டிமன்ற துவக்கவுரை :

திருமிகு திருப்பூர் **வி. ஆர். மணிமாறன்** தலைவர் தமிழ்நாடு விட்டுவசதி வாரியம

பட்டிமன்ற தலைப்பு;

**"அண்ணாவின் கொள்கைக்கும் தமிழகத்திற்கும் கருணாநிதி செய்த துரோகம் ஆட்சியில் இருந்தபோது அதிகமா? எதிர்க் கட்சியாக இருக்கும் போது அதிகமா?"**

நடுவர்: **நாஞ்சில் நீ. மணிமாறன்**

ஆட்சியில் இருந்த போது ★ எதிர்கட்சியாக இருக்கும்போது

| ஆட்சியில் இருந்த போது | எதிர்கட்சியாக இருக்கும்போது |
|---|---|
| திருமிகு கோடம்பாக்கம் **எம். குமார்** (அணித்தலைவர்) | திருமிகு **என்.வி.என்.செல்வம்** பி.ஏ. (அணித்தலைவர்) |
| கவிஞா மணிமொழி | மானகிரி பாண்டியன் |
| தாம்பரம் லட்சுமிமுத்து | வண்ணை அனுராதா |

★★★ : நிகழ்ச்சிகள் :- ★★★

| | | | |
|---|---|---|---|
| 23.4.86 | மயிலைப் பகுதி | 6.5.86 | பெரம்பூர் பகுதி இளைஞர் அணி |
| 28.4.86 | பூங்கா நகர் பகுதி | 7.5.86 | பெரம்பூர் பகுதி இளைஞர் அணி |
| 29.4.86 | ஆர். கே. நகர் பகுதி | 8.5.86 | பெரம்பூர் 42- வது வட்டம் |
| 30.4.86 | மயிலைப் பகுதி | 9.5.86 | பெரம்பூர் பகுதி இளைஞர் அணி |
| 3.5.86 | எழும்பூர் பகுதி | | |
| 4.5.86 | மயிலைப் பகுதி | | |
| 5.5.86 | இராயபுரம் பகுதி | | |

---

## தமிழ்நாடு அரசு பரிசு சீட்டு

குலுக்கல் முடிவுகள்

230-வது குலுக்கல் முடிவுகள்: நாள்: 20-4-1986
இடம்: இராசாசி மண்டபம் சென்னை-2

முதல் பரிசு ரூ 1,00,000
(எல்லா வரிசைக்கும் பொது)
ஒய் யு 006141 (சென்னை)

இரண்டாம் பரிசு ரூ. 10,000
(முதல் பரிசு பெறாத மற்ற இரு வரிசைகளுக்கும்)
ஒய் எஸ் 089961 சென்னை — ஒய் டி 453449 சென்னை

(எல்லா வரிசைக்கும் பொது)
மூன்றாவது பரிசு ரூ 500 (150 பரிசுகள்)
கீழ்க்கண்ட கடைசி ஐந்து எண்களில் முடியும் எல்லா பரிசுச் சீட்டுக்களுக்கும்)

| | | | | |
|---|---|---|---|---|
| 0 232 | 51210 | 56532 | 68764 | 79161 |
| 45608 | 52103 | 66340 | 72938 | 86517 |

நான்காவது பரிசு ரூ. 50 (1,500 பரிசுகள்)
கீழ்க்கண்ட கடைசி நான்கு எண்களில் முடியும் எல்லா பரிசுச் சீட்டுக்களுக்கும்)

| | | | | |
|---|---|---|---|---|
| 0729 | 2424 | 4620 | 7863 | 8620 |
| 1609 | 4452 | 6625 | 7890 | 9620 |

ஐந்தாம் பரிசு ரூ. 20 (1,500 பரிசுகள்)
கீழ்க்கண்ட கடைசி நான்கு எண்களில் முடியும் எல்லா பரிசுச் சீட்டுக்களுக்கும்)

| | | | | |
|---|---|---|---|---|
| 2767 | 6217 | 6407 | 6918 | 8558 |
| 4018 | 6330 | 6467 | 7470 | 9076 |

ஆறாம் பரிசு ரூ 10 (15 000 பரிசுகள்)
கீழ்க்கண்ட கடைசி மூன்று எண்களில் முடியும் எல்லா பரிசுச் சீட்டுக்களுக்கும்)

| | | | | |
|---|---|---|---|---|
| 037 | 210 | 437 | 639 | 835 |
| 131 | 341 | 510 | 787 | 905 |

ஏழாம் பரிசு ரூ 5 (60 000 பரிசுகள்)
கீழ்க்கண்ட கடைசி மூன்று எண்களில் முடியும் எல்லா பரிசுச் சீட்டுக்களுக்கும்)

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 031 | 200 | 419 | 626 | 820 | 059 | 215 | 420 | 645 | 827 |
| 085 | 219 | 451 | 663 | 839 | 093 | 234 | 477 | 695 | 873 |
| 118 | 306 | 502 | 742 | 936 | 120 | 318 | 526 | 757 | 947 |
| 142 | 326 | 571 | 769 | 959 | 187 | 344 | 597 | 798 | 974 |

பரிசுத்தொகையை பெற விண்ணப்பிக்க வேண்டிய கடைசி நாள்:-
அரசு கருவூலங்களில் 18-7-86
இயக்குனர் அலுவலகத்தில் 16-10-86

அடுத்த 231-வது குலுக்கல 27-4-86 அன்று சென்னையில் நடைபெறும்.

8-6-86 அன்று நடைபெற உள்ள சிறப்பு குலுக்கல் சீட்டுகள் விற்பனையில் உள்ளன

இயக்குநர் தமிழ்நாடு பரிசுச் சீட்டு துறை சென்னை—1

---

# சென்னை - தஞ்சை இடையே வாயுதூத் விமான சர்வீஸ்கள்

தஞ்சாவூர் ஏப் 21— சென்னைக்கும்- தஞ்சைக்கும் இடையே தமிழகத்திலேயே முதன் முறையாக வாயுதூத விமான சாவீஸ் விடப்பட்டுள்ளது

இதுபற்றிய தகவலை இ. காங்கிரஸ் நாடாளுமன்ற உறுப்பினர் சிங்காரவடிவேலு தெரிவித்தார்

தஞ்சைக்கும், சென்னைக்கும் இடையே தமிழகத்திலேயே முதன் முறையாக வாயுதூத விமான சாவீஸ் விடப்பட வேண்டுமென்று தமிழக எம்.பி.க்கள் மத்திய அரசை கோரினா.

இந்தக் கோரிக்கையை மத்திய அரசு ஏற்றுக் கொண்டுளளதாகவும், விரைவில் வாயுதூத்விமான சாவீஸ் துவங்கு மென்றும் விமானப் போககுவரத்துத் துறை துணை மந்திரி ஜெகதீஷ் டைட்லா தன்னிடம தெரிவித்ததாக சிங்காரவடிவேலு தெரிவித்தார் இந்த விமானவிட அனுமதி வழங்கி சமபந்தப்பட்ட அதிகாரிகளுக்கு விமானத் துறை அமைச்சகம் உத்தரவிட்டுள்ளதாகவும் தெரிகிறது சென்னை தஞ்சைக்கு இடையே [illegible] சாவீஸ [illegible] மெனத் தெரிகிறது

## டாக்டர் பாலிக்கு 2-வது முறை ஆபரேஷன்

சென்னை, ஏப். 21— நாடாளுமன்ற உறுப்பினர் வைஜயந்தி மாலாவின் கணவர்பாலிக்கு மூளையில் ரத்தக் கசிவு ஏற்பட்டு சென்னை அப்பல்லோ மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார். அங்கு அவருக்கு கடந்த வெள்ளிகிழமை ஆபரேஷன் நடந்தது. டாக்டர் நரேந்திரா இந்த ஆபரேஷனை செய்தார். பாலியை முதல்வர் புரட்சிதலைவர் மத்தியசுகாதார அமைச்சர் மோஷனா கித்வாய் ஆகியோர்சென்று பார்த்து உடல் நலம் விசாரித்தனர்.

மீண்டும் அவருக்குமூளையில் ரத்தக்கசிவு ஏற்பட்டது எனவே ரத்தக்கட்டியை அகற்ற 2வது முறையாக நேற்று ஆபரேஷன் நடந்தது. 1½ மணி நேரம் ஆபரேஷன் செய்து கட்டியை அகற்றினர்.

# வங்கிக்கொள்ளைவழக்கு சாட்சியைக் கொல்ல சோப்ராஜுக்குப் பணம்

### கூட்டாளியின் லண்டன் வீட்டில் சோதனை



புதுடெல்லி, ஏப். 21— வங்கிக்கொள்ளைவழக்கு ஒன்றில் சாட்சியை கொலை செய்ய சோப்ராஜ் 20 ஆயிரம் டாலர் பணம் பெற்றதாக தெரிய வந்துள்ளது

திகார்ஜெயிலில் இருந்து தப்பி ஓடி பிடிபட்ட சோப்ராஜும் அவனுடைய கூட்டாளி ஹாலும் போலீஸ்காவலில் வைக்கப் பட்டுள்ளனர்.

சோப்ராஜின் கூட்டாளியும் வங்கிக் கொள்ளை வழக்கில் குற்றம் சாட்டப் பட்ட வருமான சேத்தியா ஆகியோர் கோர்ட்டுக்கு அழைத்துவரப்பட்டனர்.

சோப்ராஜின் போலீஸ் காவலை நீடிக்க வேண்டும் என துணைக் கமிஷனர் அமோத்சனநாத் கோரினார்.

லண்டனில் உள்ள டேவிட் ஹாலின் வீடு சோதனையிடப் பட்டதில், பல முக்கிய தஸ்தாவேஜுகள்கைபற்றப்பட்டதாகவும் 'இண்டர்போல் போலீசார் மேற்கொண்டு விசாரித்து வருவதாகவும் அமோத் கூறினார்.

சேத்தியா வழக்கில் சாட்சியை கொலை செய்ய 20 ஆயிரம் டாலர் சோப்ராஜுக்கு அளிக்கப்பட்டதாக தெரிய வந்துள்ளதாகவும் அமோத் கூறினார்.

### சோப்ராஜ் வாதம்

வெளிநாடுகளில் நடந்த சம்பவங்களை இந்திய கோர்ட்டில விசாரிக்க உரிமை இல்லைஎன சோப்ராஜ் கூறினார்.

தலைமைமெட்ரோபாலிடன் நீதிபதி வாசன் சோப்ராஜ்மீதானபோலீஸ் காவலை 21-ம் தேதி வரை நீடித்து உத்தரவிட்டார்.

### ராணுவ காவல்

போலீஸ்காவலில் உள்ள சோப்ராஜுக்கு பலத்த காவல் போடப்பட்டுள்ளது.

ராணுவத்தினர் 24 மணி நேரமும் காவல் புரிந்து வருகிறார்கள் சோப்ராஜோடு ஜெயிலில் இருந்து தப்பி பிறகு கைதானவர்கள் தனித்தனி அறைகளில் அடைக்கப பட்டுள்ளனர்.

## மதுரை நகரில் 7 காவல்துறை வண்டிகள்

மதுரை, ஏப் 21— மதுரை நகரில்புதிதாக ஏழு காவல் துறைவேன்கள் மதுரையை சுற்றி வருகின்றன. இது காவல் துறைக்குமட்டுமின்றிஅவசர அவசியமான பொதுமக்களின் பணிக்கும் பயன்படும்,

மதுரைநகரில் 14 காவல் நிலையங்கள் உள்ளன. இரண்டு காவல் நிலையங்களுக்கு ஒரு வேன் வீதம் 7 புதிய வேன்கள் மதுரையைச் சுற்றிவரும்.

இது காவல் பணிகளுக்கு மட்டுமின்றி பெண்கள் பிரசவ வேதனையில் துடித்தாலோ, அல்லது விபத்து ஏதும் ஏற்பட்டு காயம் அடைந்தவர்களையோ, மற்ற அவசர நோயாளிகளை மருத்துவ மனையில் சேர்ப்பதற்கோ இந்தகாவல்துறைவேன்கள் பயன்படும். தகவல் கொடுத்த இரண்டே நிமிடத்தில் காவல்துறை வேன் வந்துவிடும்.

இந்த விசேஷ ஏற்பாட்டை மதுரை நகர காவல்துறை சூப்பிரண்ட் கே. வி. எஸ். மூர்த்தி செய்துள்ளார்.





# சுற்றுலா பொருட்காட்சி: ரூபாய் 30 லட்சம் அரசுக்கு வருவாய்

சென்னை, ஏப். 21— தமிழ்நாடு சுற்றுலா பொருட்காட்சியின்மூலம் இந்த ஆண்டு 30லட்சம் ரூபாய்நிகரலாபம்கிடைத்துள்ளதுஎன்று சட்டப்பேரவை சபாநாயகர் பி எச். பாண்டியன் பொருட்காட்சி நிறைவு விழாவின் போது தெரிவித்தார்.

சென்னையில் கடந்த 3 மாதகாலமாகநடைபெற்று வந்த தமிழ்நாடு 13-வது சுற்றுலா பொருட்காட்சி நேற்று நிறைவு பெற்றது.

நிறைவு விழாவுக்கு சட்டப் பேரவை சபாநாயகர் பி எச். பாண்டியன் தலைமை வகித்து, சிறந்த அரங்குகளுக்கு பரிசுகளை வழங்கினார்.

தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகநிர்வாக இயக்குநர் கிருபாசரன் வரவேற்றார் அறநிலையத் துறை ஆணையர் மற்றும் சிறுசேமிப்புதுறைதலைவர் சுந்தரமூர்த்தி தமிழக கைத்தறி கூட்டுறவு நெசவாளர் சங்க ஆலோசனைக் குழுத் தலைவர் அனகாபுத்தூர் ராமலிங்கம். எம் எல். சி. ஆகியோர்விழாவில் கலந்து கொண்டனர்

சபாநாயகர் பி எச். பாண்டியன் பேசுகையில் கூறியதாவது:-

கடந்த 102 நாட்களாக நடைபெற்ற பொருட்காட்சியின் மூலம் 74 லட்சம் ரூபாய் வசூலாகியிருக்கிறது இதில்நிகர லாபம ரூபாய் 30 லட்சம இது ஒரு சாதனை என்றே சொல்ல வேண்டும்.

இதற்காக சுற்றுலா துறையினரைப் பெரிதும் பாராட்டுகிறேன்

சுற்றுலாத் துறையினரை பின்பற்றி மற்ற துறையினரும் தங்களது துறைகளை லாபகரமாக நடத்த வேண்டும்.

தமிழகத்தில் தொழில்கள் அதிக அளவில் துவக்கப்பட வேண்டும். சிறு தொழில்கள் பெரும் அளவில் பெருக வேண்டும் அரசு வழங்கும் கடன்உதவிகளைபயன்படுத்திதொழில்களை தொடங்கினால் நாட்டு மக்களின் பொருளாதாரம் முன்னேற்றம் அடையும்.

இவ்வாறு பி.எச். பாண்டியன் கூறினார்.

மாவட்ட அரங்குகளில் சேலம் மாவட்டத்திற்கு முதல் பரிசு கிடைத்தது.

கடந்த 4 ஆண்டுகளாக சேலம் தொடர்ந்து முதல் பரிசை தக்க வைத்துக் கொண்டு வருகிறது 2வது பரிசு மதுரைக்கும் 3-வது பரிசு பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்துக்கும கிடைத்தன,

மத்திய மாநில அரசுகளைச் சேர்ந்த பல்வேறு தொழில்துறை நிறுவனங்களுக்கும் பரிசுகள் கிடைத்தன.

சபாநாயகர் பி எச். பாண்டியன் பரிசுகளை வழங்கினார். சுற்றுலாத் துறை நிர்வாகப் பொறியாளர் வடிவேலு நன்றி கூறினார்.

## கழகக் கூட்டம்

நாள் 25-4-86 வெள்ளி மாலை 7-மணி

இடம்- அண்ணா திடல்

தலைமை- கே வேலுசாமி

முன்னிலை: பெரியசாமி கே.ஆறுமுகம்.

வரவேற்பு; டி.பாண்டியன்

பாராட்டிப் பேசுவோர்: சட்டமன்றஉறுப்பினர் கே. குப்புசாமி மற்றும் பலர்.

பாராட்டு பெறுவோர்: பழனி நகர்மன்ற உறுப்பினர்கள் மற்றும் ஊராட்சி, பேரூராட்சி தலைவர்கள்

இசை நிகழ்ச்சி: கே ராமகிருஷ்ணன், கவிதா குழுவினர்.